REGD No. TN MS (C) 244 ANNA Lead Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு



**நல்ல நூல்**

மனிதன் தன்னைச் சுற்றிலும் ஆராய்ந்து சூழ்நிலையை தெளிந்து தெரிந்து நடந்திடத் தூண்டிடும் ஏடுகளை எழுதியாக வேண்டும் தமிழில்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**நல்ல இருதயம்**

இந்தியாவிற்கு தேவையானது ஒரே மாதிரியான நல்ல ஆடையல்ல; ஒரே மாதிரியான நல்ல இருதயமே!

-அண்ணல் காந்தி



● மலர்: 3 சென்னை 10—10—1979 புதன் (★) ✻ ● ✻ (✶) வெளியூர் 11-10-1979 வியாழன் இதழ்: 351 ●

# திருப்பத்தூர் அருகே தி.மு.க.வினர் அட்டூழியம்: ஓட ஓட துரத்தி

# கழகத்தோழர் படுகொலை

## புரட்சித்தலைவர் கண்ணீர்: அமைச்சர்கள் விரைந்தனர்

**வேலூர், அக் 10- தேர்தல் பணிகளில் தீவிரமாக ஈடுபட்டு இருந்த கழக அட்லே திருப்பத்தூர் வி. சி. ராஜியை தி. மு. கழக காலிகள் ஓடத் துரத்தி பல இடங்களில் வெட்டிக் கழுத்தை அறுத்து பயங்கரமாக கொலை செய்தனர்:**

மனிதாபிமானமற்ற இந்த பயங்கர கொலை நேற்று காலை திருப்பத்தூர் அருகே உள்ள வெங்காயப்பள்ளி கிராமத்தில் நடந்தது.

வருகிற நாடாளுமன்ற தேர்தலை ஒட்டி கழகச் செயல் வீரர் வி. சி.ராஜி தீவிர பணிகளில் ஈடுபட்டு வந்தார். இவர் வடஆற்காடு மாவட்டம் திருப்பத்தூரில் வசித்து வருபவர். இவருக்கு வயது 52.

நேற்று காலை ராஜி கொலை செய்யப்பட்டார் என்ற செய்தி கிடைத்ததும் முதல்வர் புரட்சித் தலைவர் அதிர்ச்சியுற்று கண்கலங்கினர். ராஜியின் குடும்பத்தினருக்குஆறுதல் கூறி தந்தி அனுப்பியுள்ளார்,

கழக செயல்வீரர் வி. சி. ராஜி வெங்காயப்பள்ளி பஞ்சாயத்துத் தலைவராகவும் இருந்தவர்.

இவர் நேற்று காலை மோட்டார் சைக்கிளில் திருப்பத்தூரில் இருந்து வெங்காயப்பள்ளி கிராமத்திற்கு சென்று கொண்டு இருந்தார்.

அப்போது வழியில் வெங்காயப்பள்ளி கிராமத்தைச் சேர்ந்த தி. மு. கழகத்தினர் சிலர் கத்தி, அரிவாள், தடி முதலிய பயங்கர ஆயுதங்களுடன் ராஜியை வழிமறித்தனர்.

முதலில் ராஜி சரமாரியாக கற்களை வீசினர்கள். அவர் உடனே ஓட முயன்றார்.

ஆனால் இந்தக் காலிகள் அவரை விடாமல் துரத்திச்சென்று பலஇடங்களில் வெட்டினர்கள்,

அவருடைய கழுத்து அறுக்கப்பட்டு அந்த இடத்திலேயே ரத்த வெள்ளத்தில் மிதந்து பிணமானார்.

இந்தப் பயங்கரக் கொலை பற்றிய தகவல் கிடைத்ததும் அப்பகுதி கழகத் தோழர்கள் பதறித்துடித்தனர்

பிறகு ராஜியின் உடலை திருப்பத்தூரில் உள்ள அவரது வீட்டில் பொதுமக்கள் பார்வைக்காக வைத்தனர்.

இதுபற்றி தகவல் கிடைத்தவுடன் காவல் துறையினர் விரைந்து வந்து புலன் விசாரணை நடத்தினர்கள்.

### முதல்வர் கண்ணீர்

முதல்வர் புரட்சித்தலைவருக்கு தகவல் கிடைத்ததும் அவர் திடுக்கிட்டுக் கண்ணீர் வடித்தார்.

ராஜியின் இறுதிச் சடங்கில் கலந்து கொண்டு அமைச்சர்கள் கே ஏ கே யையும், அரங்கநாயகத்தையும் செல்லும்படி முதல்வர் கூறினர்.

தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்தலைவர் ஏ. கே.அரங்கநாதனும் மற்ற சட்டமன்ற உறுப்பினர்களும், கழகத் தோழர்களும், ராஜியின் இல்லத்தில் நேற்று முதல் இருந்து வருகிறார்கள்.

இன்று நடக்கும் இறுதிச் சடங்கில் அமைச்சர்கள் கே.ஏ.கே.யும், அரங்க

(1-ம் பத்தி பார்க்க)

(4-ம் பத்தி தொடர்ச்சி)

நாயகமும் கலந்துகொள்கிறார்கள்.

முதல்வர் புரட்சித் தலைவர் சார்பில்மலர் வளையங்களை அமைச்சர்கள் ராஜியின் உடல்மீது வைத்து அஞ்சலி செலுத்தினர்கள்.

இந்த பயங்கர கொலை தொடர்பாக 18 பேர் மீது வழக்கு பதிவு செய்யப்பட்டுள்ளது.

இவர்கள் அனைவரும் வெங்காயப்பள்ளி கிராமத்தைச் சேர்ந்ததிமுகவினர்.

மருத்துவமனையில் பகவதி

### நாஞ்சிலார் பார்த்தார்

சென்னை, அக். 10- தமிழக நிதியமைச்சர் நாஞ்சிலார் மருத்துவமனைக்குச் சென்று டி. கே. பகவதியை பார்த்தார். டாக்டர்களிடம் உடல்நிலை பற்றி கேட்டறிந்தார்.

நடிகர் டி. கே. பகவதி ராயப்பேட்டையில் உள்ள அரசு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளார்.

உயிருக்கு ஆபத்தான நிலையில் இருக்கும் அவருக்கு பிராணவாயுசெலுத்தப்பட்டு வருகிறது.

கவலைக்கிடமான நிலையில் டி.கே. பகவதி இருப்பதாக மருத்துவர்கள் தெரிவித்தனா.

டி. கே. பகவதி- டி.கே. சண்முகத்தின் சகோதரர் ஆவார்.

மேலவைத்தலைவர் சிலம்புச் செல்வர் டாக்டர் ம. பொ. சி. மருத்துவமனை சென்று பகவதியைப் பார்த்தார்.

### பாகிஸ்தான் தேர்தல் ஒத்திவைப்பு

இஸ்லாமாபாத், அக்.10- பாகிஸ்தானில் தேர்தல் சட்டங்கள் திருத்தப்படுவதால் நவம்பர் 17-ந் தேதி நடைபெறுவதாக இருந்த பாகிஸ்தான் பொதுத் தேர்தல் ஒத்திவைக்கப்படுகிறது என்று பாகிஸ்தான் அதிபர் ஜியா உல் ஹக் தெரிவித்தார்.

### மீனம்பிகை மறைவிற்கு இரங்கற் கூட்டம்

சென்னை, அக். 10-சேப்பாக்கம் தொகுதி மகளிர் அமைப்பாளர் மீனம்பிகை மறைவிற்கு இரங்கல் பொதுக்கூட்டம் நாளை 11ந்தேதி (வியாழன்) மாலை 6 மணிக்கு ஆனந்த் திரையரங்கு அருகேயுள்ள ரங்கூன் வீதியில் நடக்கிறது.

எம், ஆர், ராசேந்திரன் தலைமை வகிக்கிறார். கூட்டத்தில் அமைச்சர் பி.டி.எஸ், பா. வளர்மதி, சி, வி. அன்புத் தம்பி, பா. அங்கமுத்து. டி. சகுந்தலா, கஸ்தூரி பாலன், சரசம்மாள், வண்ணை ஜெயா, ஆலந்தூர் ஆண்டாள், ஆண்டாள் ரவூத், கண்ணம்மாள் ஆறுமுகம், உபகார மேரி, அ, கணபதி, சம்பங்கி ராவ், ராஜமோகன் ரத்தினகுமார் மற்றும் பலர் பேசுகின்றனர்,

### ஜெ. பிக்கு அனுதாபம்

சென்னை, அக், 10-டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார் தன்னுடைய அனுதாபச் செய்தியில் கூறியதாவது:

ஜெயப்பிரகாஷ் நாராயணன் ஒரு சிறந்த தேசியவாதி, சர்வோதய தலைவர். ஏழை எளியவர்களுக்காக பாடுபட்டவர். அவரது மறைவு இந்த சமயத்தில் நமது நாட்டுக்கு பெரிய இழப்பாகும்.

அவர் விட்டுச்சென்ற பணியை தொடர்ந்துசெயலாற்றுவதே நாம் அவருக்கு செய்யக்கூடிய அஞ்சலியாகும்.

இவ்வாறு அந்தச் செய்தியில் கூறியுள்ளார்.

குடியரசு தலைவர்-பிரதமர் சந்தனக்கட்டையை எடுத்து வைத்தனர்

# ஜெ. பி. உடல் தகனம்: லட்சோப லட்சம் மக்கள் கண்ணீர் அஞ்சலி

## பீரங்கி வண்டியின் பின்னால் புரட்சித்தலைவர், முதல்வர்கள் கண்ணீர் மல்க நடந்து சென்றனர்

**பாட்னா, அக். 10- நேற்று (செவ்வாய்) பகல் 2.05 மணிக்கு கங்கைக்கரை இடுகாட்டில் குடியரசுத் தலைவர் சஞ்சீவரெட்டி, பிரதமர் சரண்சிங், முன்னாள் பிரதமர்கள் இந்திரா காந்தி, மொரார்ஜி தேசாய் மற்றும் ஆச்சார்ய கிருபளானி ஆகியோர் சந்தனக்கட்டைகளை எடுத்துவைக்க ஜெயப்பிரகாஷின் உடலுக்கு அவரது சகோதரர் மகன் ரத்னேஷ்வர் பிரசாத் தீ மூட்டினர்.**

**லட்சோப லட்சம் மக்கள் கண்ணீர் அஞ்சலி செலுத்தியபடி 'அமரர் ஜெயப்பிரகாஷ் வாழ்க' என்று ஒலி முழக்கம் எழுப்பினர்.**



பீரங்கி வண்டிக்குப் பின்னால் சோகமே உருவாக தமிழக முதல்வர் புரட்சித்தலைவர், ஜனதாகட்சித் தலைவர் சந்திரசேகர், கட்சிச் செயலாளர் நானாஜி தேஷ் முக், பீகார் முதல்வர் ராம்சுந்தர் தாஸ், மற்ற மாநில முதல்வர்கள் சென்றனர்,

ஜெயப்பிரகாஷின் உடல் பச்சை பீரங்கி வண்டியில் வைக்கப்பட்டு கங்கைக் கரையில் உள்ள மயானத்துக்குக் கொண்டு செல்லப்பட்டபோது மக்கள் கண்ணீர் உகுத்தபடி திரளாகத் திரண்டு வந்து கொண்டிருந்தனர்.

இறுதி ஊர்வலம் வந்த போது சாலைகளின் இருபுறமும், மாடிகளிலும், மரங்களிலும் இருந்து பல்லாயிரக்கணக்கான மக்கள் ஜெயப்பிரகாசருக்கு அஞ்சலி செலுத்தினா.

பலவிடங்களில் தற்காலிகமாகப் போடப்பட்டிருந்த மூங்கில் வேலிகள் கூட்டநெரிசலில் சாய்ந்து விட்டன.

ஆண்களும், பெண்களும் வீட்டு மாடியிலிருந்து ஜெயப்பிரகாஷ் உடல்மீது பூக்களைச் சொறிந்தனர்.

முதலில் இராணுவ அதிகாரிகள் ஜெயப்பிரகாஷ் உடலில் தேசியக் கொடியை சுற்றி உடலைத் தூக்கிக் கொண்டு வந்து பீரங்கி வண்டியில் வைத்தார்கள்.

அந்த வண்டியில் ஜெயப்பிரகாஷ் நாராயண் தம்பி ராஜேஸ்வர் பிரசாத், சகோதரர் குமாரர் ரத்னேஷ்வர் பிரசாத், அந்தரங்கச் செயலாளர் சச்சிதானந்த் சின்கா மற்றும் இராணுவ, விமானப்படை அதிகாரிகள் இருந்தனர்.

இராணுவத்தையும், விமானப் படையையும் சேர்ந்த அதிகாரிகள் பீரங்கி வண்டியின் முன்னாலும், பின்னாலும் துப்பாக்கிகளைத் தலைகீழாகப் பிடித்துக்கொண்டு அணிவகுத்துச் சென்றனர்.

இராணுவ சோக கீதம் இசைக்கப்பட்டது.

முதல்வர் புரட்சித் தலைவர், ஜனதாக்கட்சித் தலைவர் சந்திரசேகர், கட்சிச் செயலாளர் நானாஜி தேஷ்முக், பீகார் முதல்வா ராம்சுந்தர்தாஸ், மற்ற அமைச்சர்கள் பீரங்கி வண்டியைத் தொடர்ந்து சென்றார்கள்.

இறுதி ஊர்வலத்துக்கு முன் இளைஞர் சங்கங்கள் வேண்டுகோளின் பேரில் ஒரு சிறு ஊர்வலம் நடைபெற்றது. மலர்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு லாரியில் ஜெயப்பிரகாஷ் உடல் வைக்கப்பட்டு கிருஷ்ணா நினைவு மண்டபத்திலிருந்து புறப்பட்டு காந்தி மைதானத்தைச் சுற்றிவிட்டுமீண்டும்மண்டபத்துக்கே அதுதிரும்பியது

லாரியில் ஜனதாகட்சித் தலைவர் சந்திரசேகர் இருந்து கூட்டத்தினரை வழி விடுமாறு கேட்டுக் கொண்டுவந்தார் ஊர்வலத்தின் பின்னால் வந்தவர்கள் 'ராம்துன்'

(2-ம் பக்கம் பார்க்க)

# பீடி சுற்றும் ஊழியருக்கு சம்பள உயர்வு: கழக அரசு முயற்சி வெற்றி



**திருச்சி, அக் 10- திருச்சி மாவட்டத்தில் பீடிசுற்றும் தொழிலாளர்களுக்கு சம்பளஉயர்வு அளிக்கப்பட்டுள்ளது அண்ணா தொழிற்சங்கத்தின் முயற்சியால் கழகஅரசுமேற்கொண்ட பேச்சு வார்த்தையில் இந்த உடன்பாடு ஏற்பட்டது.**

திருச்சி மாவட்டத்திலுள்ள பீடித் தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வு மற்றும் கோரிக்கைகளை முன் வைத்து தீர்வு காணுவதற்கு அண்ணா தொழிற்சங்கப் பேரவையின் சார்பிலும், திருச்சி மாவட்ட அண்ணா பீடித் தொழிலாளர் சங்கத்தின் சார்பிலும், இதர தொழிற்சங்க அமைப்புகளின் சார்பிலும் தீவிர முயற்சியெடுத்துக் கொள்ளப்பட்டது. தொழிலாளர் நல அமைச்சர் எஸ். ராகவானந்தத்திடம் நிலைமைகள் விளக்கப்பட்டன.

தொழிலாளர் நல அமைச்சரின் அறிவுரைகளின் பேரில் நல்லதொரு தீர்வும் ஏற்பட்டது.

தொழிலாளர் துறை சிறப்புத்துணை ஆணையர் பொ. லட்சுமணன் முன்னிலையில் திருச்சியில் ஏற்பட்ட இந்தஒப்பந்தத்தின் மூலம் 1000 (ஆயிரம்) ஜாடிப் பீடிகள் சுற்றஇது நாள்வரைரூ. 5-50பைசா பெற்று வந்தவர்கள் இனி ரூ. 5-75பைசா பெறுவார்கள்.

1000 சாதாபீடி சுற்ற இதுநாள்வரை ரூ. 5-25 பைசாபெற்றுவந்தவர்கள் இனி ரூ. 5-50 பைசா பெறுவார்கள்.

1000 பீடிக்கு இது நாள் வரை 6 பைசா போனசாக வழங்கப்பட்டது; இனி 7 பைசா போனசாக வழங்கப்படும்.

இலை, புகையிலைப் பெற்றுச் சென்று தங்கள் இல்லங்களில் சுற்றும் தொழிலாளர்களுக்கு பீடி கட்டும் நூல் இதுநாள் வரை நூல் வழங்கப்படவில்லை. புதிய ஒப்பந்தத்தின் படி நூல் வழங்க நிர்வாகம் ஒப்புக்கொண்டது. ஒப்பந்தம் 8 10 முதல் 31-12-1981 வரை அமலில் இருக்கும்.

திருச்சி மாவட்ட அண்ணா தொழிலாளர் சங்கத்தின் சிறப்புத்தலைவர் கே. பெருமாள் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார். மற்றும் ஏ. ஐ. டி. யு. சி, டி.என் டி.யு.சி,, முஸ்லிம் லீக், ஐ.என்.டி.யு.சி, தி.மு.க. சங்கங்களின் பிரதிநிதிகளும ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர். 25 9-79 முதல் நடைபெற்று வந்த வேலைநிறுத்தம் 8 10 79 முதல் விலக்கிக் கொள்ளப்பட்டு தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பினர்கள்.

கழக அரசு முயற்சிக்கு தொழிலாளர்கள் நன்றி தெரிவித்தனர்.

# தேர்தல் வெற்றி யாருக்கு

## சரண்சிங்- ஜெகஜீவன்- இந்திரா சிறப்புப் பேட்டி

பம்பாய். அக் 10- தேர்தலில் வெற்றி யாருக்கு என்று பிரதமர் சரண்சிங் இந்திராகாந்தி. ஜெகஜீவன் ராம் ஆகியோரிடமகேட்கப்பட்டது

ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமானசுவையான கருத்தைச் சொல்லியுள்ளார்கள்

நாடாளுமன்றத் தேர்தல் முடிவு எப்படி இருக்கும் என்பது பற்றி இந்த மூன்று தலைவர்களிடமும ''இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி ஆப் இந்தியா'' பத்திரிகை நிருபர் கேட்டுள்ளார்.

பிரதமர் சரண்சிங் கூறுகையில் தமக்கு பரிபூரண மெஜாரிட்டி கிடைக்கும் என்றுநம்பிக்கை தெரிவித்தார்,

ஜனதாக் கட்சித்தலைவர் ஜெகஜீவன்ராம் கூறும்போது 'ஜனதாக்கட்சிக்கே மெஜாரிட்டி கிடைக்கும் ஆட்சி அமைக்கப்போவது ஜனதாக் கட்சிதான் என்றார்.



ஆனால் இந்திரா காந்தி கூறும்போது ''நாடு சிதறுண்டு போக வேண்டுமா, அல்லது பிளவுபடாமல் ஒன்றாக இருக்கவேண்டுமா என்பதை மக்களே முடிவு செய்ய வேண்டும்'' என்று குறிப்பிட்டார்.

பிரதமர் பதவியை எதிர்பார்த்திருக்கும்இந்தமூன்று தலைவர்களும் மிகுந்த நம்பிக்கையுடன் பேட்டி அளித்ததாக அந்த நிருபர் கூறுகிறார்.

ஜெகஜீவன்ராம் கூறும் போதும், சரண்சிங் குறிப்பிடும் போதும் ''எனது கட்சியின் பிரதான எதிர்க்கட்சியாக இருப்பவர் இந்திராதான்' என்று கூறினர்கள்.



ஆனால் இந்திரா கூறும் போது ''ஜனசங்கம், ஆர். எஸ். எஸ். போன்ற இயக்கங்களே எங்களின் பிரதான எதிர்க்கட்சிகள். அவற்றுக்கு கட்டுப்பாடான தொண்டர்கள் உள்ளனர்'' என்றார்.

அவர்களிடம் பணமும் இருக்கிறது. மேல்நாடுகளின் ஆதரவும் அவர்களுக்கு உள்ளது என்றார் இந்திரா காந்தி.



பிரதமர் சரண்சிங் கூறும்போது லோக்தளத்துக்கும் இகாங்கிரசுக்கும தான் முக்கிய போட்டி என்றார்.

ஜெகஜீவன்ராம் ஜனதாவுக்கும் இ, காங்கிரசுக்கும் தான் முக்கியப் போட்டி என்றார்,

## ஒரே கம்பத்தில் 71 கழகக் கொடிகள்: ஜேப்பியார் ஏற்றினர்

சென்னை, அக். 10. சென்னை, 140வது வட்டம் சி. ஐ. டி. நகர் நாலாவது மெயின் சாலையில் பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழா நடந்தது. ஒரே கம்பத்தில் 71 கொடிகளை ஜேப்பியார் ஏற்றி வைத்தார். ஏ. வேலாயுதம் தலைமை வகித்தார். கு. க், செல்வம், சைதை கண்ணன், தி. நகர் மூர்த்தி, சைதை வடிவேலு, என். பி. அருணாசலம், மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

## கரூர் மண்மங்கல தி.மு.க. கிளை கூண்டோடு கலைப்பு

கரூர், அக். 10- கரூர் ஊராட்சி ஒன்றிய மண்மங்கல மேநிநகர் தி.மு.க கிளை கூண்டோடு கலைக்கப்பட்டது. எம். கணேசன், பி. பழனியப்பன், ஆர். சின்னப்பன் ஆகியோர் தலைமையில் 35 தி.மு.க-வினர் கரூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் கே. வடிவேல் ஒன்றிய அமைப்பாளர் ஏ. வி. வாங்கிலியப்பன் ஆகியோர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

## முரசொலி பொய்ச்செய்தி: மறுப்பு

சென்னை அக். 10- முரசொலி பொய்ச் செய்திக்கு புரசைதொகுதிகழக அமைப்பாளர் தரங்கைக் கண்ணன் மறுப்புத் தெரிவித்துள்ளார்.

ஒரு அறிக்கையில் தரங்கை கண்ணன் கூறியிருப்பதாவது:

8-10-79 காலை முரசொலியில் அனைத்திந்திய அண்ணா தி. மு. க. வினர் 31 பேர் விலகி திமுகவில் கருணாநிதி முன்பாகச் சேர்ந்ததாக ஓர் பொய்ச் செய்தியை வெளியிட்டிருக்கிறார்கள்.

ஜே. டி. ராஜேந்திரன் கட்சியின் கட்டுப்பாட்டை மீறிய காரணத்திற்காக ஒரு வருட காலத்திற்கு முன்னமே கட்சியிலிருந்து நீக்கப்பட்டவர். அதே போல் ஜே. கே மனோகரனும் கட்சியின் கட்டுப்பாட்டை மீறிய காரணத்திற்காக ஒழுங்கு நடவடிக்கைக்கு உட்பட்டவர். இவர்களைத் தவிர வேறு யாரும் இயக்கத்திலிருந்து விலகவில்லை.

முரசொலியின் பொய்ச் செய்தியை வன்மையாகக் கண்டிக்கிறேன்.

இவ்வாறு புரசைத் தொகுதி கழக அமைப்பாளர் தரங்கை கண்ணன் கூறியுள்ளார்.

## கடம்பத்தூரில் 'வேலைக்கு உணவு' திட்டம் துவக்கம்

செங்கற்பட்டு, அக், 10- திருத்தணி சட்டப் பேரவைத் தொகுதிக்குட்பட்ட கடம்பத்தூர் ஊராட்சி ஒன்றியத்தில் கொட்டையூர், இறையாமங்கலம், பிஞ்சிவாக்கம், பிஞ்சிவாக்கம் கண்டிகை தண்டலம், நுங்கம்பாக்கம், வலசை வெட்டிக் காடு, இலுப்பூர் கொப்பூர், பாப்பரம்பாக்கம், புதுவள்ளூர் ஆகிய இடங்களில் ''வேலைக்கு உணவு'' திட்டப் பணிகள் நடந்து வருகின்றன.

திருத்தணித் தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் ஆர். சண்முகம் இந்த திட்டப் பணிகளைப் பார்வையிட்டார்.

இந்தத் திட்டங்களினால் நல்லபயன் ஏற்பட்டுள்ளது என்று மக்கள் அவரிடம் தெரிவித்தனர். மக்களின் குறைகளைக் கேட்டறிந்து நடவடிக்கை எடுக்க உத்தர விடப்பட்டுள்ளது.

வட்டார வளர்ச்சி அலுவலர் மற்றும் கழகத் தோழர்கள் புதுமாலிங்கை சுந்தரம், வலசை பெருமாள், செயராமன் ஆகியோர் உடன் சென்றனர்.

# ஜெ. பி. வழி நின்று ஜனநாயகம் காப்போம்

## இரங்கற் கூட்டத்தில் டாக்டர் நாவலர் பேச்சு

சென்னை, அக் 10- ஜெயப்பிரகாசர் வழிநின்று ஜனநாயகம் காக்கப்பாடுபடுவோம என்று ஜெ பி இரங்கல் கூட்டத்தில் கழகப் பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் குறிப்பிட்டார்.

மறைந்த லோக நாயகர் ஜெயப்பிரகாசருக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் நேற்று மாலை சென்னையில் பிரும்மாண்டமான அமைதி ஊர்வலம் நடைபெற்றது.

பெரியார் பாலம் அருகில் உள்ள பெருந்தலைவர் காமராஜர் சிலை அருகிலிருந்து ஊர்வலம் புறப்பட்டது. ஊர்வலத்தின் ஆரம்பத்தில் மறைந்த ஜெ. பி.யின் படத்திற்கு மாலை அணிவித்து சர்வோதயத் தொண்டர் ஒருவர் எடுத்து வந்தார்.

அதைத் தொடர்ந்து ஊர்வலம் புறப்பட்டு வந்தது. ஊர்வலத்தில் கழகத் தோழர்களும், ஜனதா கட்சித் தொண்டர்களும் திரளாகக் கலந்துக் கொண்டனர். இரு கட்சி கொடிகளையும் அரைக் கம்பங்களில் பறக்கவிட்டு ஜெ.பி.க்கு அஞ்சலிசெலுத்தும் வகையில் எடுத்துவந்தனர்.

மாலை 4-30 மணிக்கு புறப்பட்ட ஊர்வலம் அண்ணாசாலை வழியாக 6-45 மணிக்கு தேனும்பேட்டை காமராஜர் திடல் வந்தடைந்தது. பின்னர் சர்வ கட்சித் தலைவர்கள் பங்கேற்ற இரங்கல் கூட்டம் நடைபெற்றது.

ஊர்வலத்தில்கழகத்தின் சார்பில்முன்னாள்மேலவை உறுப்பினர் மு. மாசிலாமணி, மு. வரதராசன், சேப்பாக்கம் ராஜ்குமார் கதிர் சோமசுந்தரம். அ. வ. செல்வக்கண்ணன், ரவி மற்றும் ஏராளமானோர் கலந்து கொண்டனர்.

ஜனதாக் கட்சி சார்பில் பி. ராமச்சந்திரன் எஸ்.வி லட்சுமணன், ஜெ. கிருஷ்மூர்த்தி, ரமணிபாய், கலியமூர்த்தி, இலா.இ. அன்புமணி, லட்சுமி கிருஷ்ணமூர்த்தி, சுலோசனா ஆகியோர் கலந்து கொண்டனர்,

### இரங்கல் கூட்டம்

இரங்கல் கூட்டத்திற்கு எஸ். வி. லட்சுமணன் தலைமை வகித்தார். கூட்டத்தில் கழகப் பொதுச் செயலாளா டாக்டர் நாவலர், எம். பக்தவத்சலம், சிலம்புச்செல்வர் டாக்டர் ம. பொ. சி., ஏ. ஆர். மாரிமுத்து, டாக்டர் ராஜேந்திரன், தா. பாண்டியன், ஜேம்ஸ், பா. ராமச்சந்திரன், ஆகியோர் பேசிய பின்னர் தண்டாயுதபாணி இரங்கல் தீர்மானம் கொண்டு வந்தார். தீர்மானம் கூட்டத்தில் நிறைவேறியது.

### டாக்டர் நாவலர்

கழகப் பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் பேசும்போது கூறியதாவது:

இருண்டு இருந்த இந்தியாவில் ஜனநாயக வழியில் ஒளியூட்டிய ஜெயப்பிரகாஷ் நாராயணன் மறைந்தார் என்பது அனைவரையும் துயரடைய வைத்திருக்கிறது.

நேற்றுஇருந்தவர்இன்று இல்லை.

ஈடுசெய்ய முடியாதஅந்த தலைவரை இந்தியாஇழந்து விட்டது.

அறநெறிபிறழாத மூத்த தலைவர் மறைந்துவிட்டார் என்பதை நம்மால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

ஆய்ந்து, அறிந்து சான்றோர் சொன்ன இலக்கணப்படி இருந்து நடந்தவர் ஜெயப்பிரகாசர்.

அப்படி நடந்த ஒரு சிலரில் அடங்கிய ஜெயப்பிரகாசர் மறைந்து விட்டது எவ்வளவு இழப்புஎன்பதை பல்வேறு கட்சித்தலைவர்கள் சுட்டிக்காட்டினர்.

எல்லா நற்பண்புகளும் பெற்று விளங்கியவர் ஜெயப்பிரகாசர்.

தாழ்வுற்று வறுமை மிஞ்சி, விடுதலை தவறிக் கெட்டு தாறுமாறாகக் கிடந்த இந்த நாட்டை வாழ்விக்க வந்த காந்திக்கு பின்னர் தன்னலம் மறந்து தன்னுடைய அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்தி நாட்டிற்காக உழைத்து எல்லோருடைய நெஞ்சங்களிலும் நீக்கமற நிறைந்திருப்பவர் ஜெயப்பிரகாஷ் நாராயணன்.

நேற்று காலை 5 மணிக்கு இருந்தார். இன்று காலை இல்லை. நாம் துக்கத்தில் மூழ்கி இருக்கிறோம். அவரை மீண்டும் பெற முடியாது.

''செயற்கரிய செய்வர் பெரியார்'' என்று வள்ளுவர் சொன்னார். அந்த அளவுக்கு மக்கள் மனதில் இடம் பெற்றிருப்பவர் ஜெயப்பிரகாசர்.

### மனிதப்பண்பை வளர்த்தவர்

வன்முறைக்கு இடம் தராமல் வாதாடித்தான் பெறவேண்டும் என்ற நிலையில் பட்டம் படாடோபத்திற்கு இடம் தராமல் அமைதியான போக்கிலேயே எண்ணியதைப் பெறவேண்டும் என்று காந்தி நினைத்தார்.

உள்ளத்தால் பொய்யாது ஒழுகிய, பொய்மைக்கு இடம் தராமல் வாழ்ந்தவர் ஜெயப்பிரகாசர்.

மனிதத்தன்மைகெட்டுக் கிடந்த நாட்டில் மனிதத் தன்மை வளர பாடுபட்டவர் ஜெயப்பிரகாசர்.

ஏழ்மையில் வாழ்பவர்கள், வசதி பெற முடியாமல் இருப்பவர்கள் வாழ தன் வாழ்நாள் முழுதும் உழைத்தவர் ஜெயப்பிரகாசர்.

மனிதப் பண்பு வளர வாழ்நாள் முழுதும் உழைத்த அவரை உலகம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

அந்த வகையிலே உழைத்த புத்தர், ஏசு, காந்தியை உலகம்நினைவில் வைத்திருக்கிறது.

காந்தியிடம் கண்ட சிறந்தபண்புகளைகொண்ட ஜெயப்பிரகாசரை இழந்த இந்தியாவின் 65 கோடி மக்களும் துயரத்திலும், துக்கத்திலும் மூழ்கி இருக்கிறோம். அவரது பெருமையை நினைத்து நினைத்து நெக்குருகி பாராட்டுகிறோம்.

பாராட்டப் படுகிறவர்களை எல்லாம் நாடு நினைவில் கொள்ளவில்லை.

மாவீரன் அலெக்சாண்டரைப் பாராட்டிய நாடு நினைவில் கொள்ளவில்லை.

அறிஞர் அரிஸ்டாடிலை நினைவில் வைத்துக்கொண்டிருக்கிறது.

கொடு என்று கேட்பது இழிவுகொடுக்கமாட்டேன் என்பது அதைவிட இழிவு.

நீயே எடுத்துக்கொள் என்று சொல்லுவது உயர்வு கொடுப்பதைஏற்க மாட்டேன் என்பது அதைவிட உயர்வுஎன்றுசொல்லுவார்கள்.

அந்த வகையில் நேருஜி அமைத்த அமைச்சரவையில் பதவி ஏற்குமாறு ஜெயப்பிரகாசரை கேட்டுக் கொண்டபோது வேண்டாம் என்றுமறுத்து நான்காவது வகையில் உயர்வைப பெற்றார்.

### பிறருக்கு தீங்கின்றி

ஜனநாயகப் பண்புக்கு மதிப்பளித்தவா ஜெயப்பிரகாசர்.

பிறருக்குத் துன்பம் தருவது போராட்டம், தன்னைத்தானே வருத்திக் கொள்வது அறப்போராட்டம்

பிறரை கொடுமைகளவும் வருத்தாமல், தீங்களிக்காமல் இருக்கவேண்டும். அதுதான் அறப்போராட்டம் அந்த கருத்துக்கு மதிப்பளித்தவா ஜெயப்பிரகாசர்.

ஒரு குறிக்கோள் நன்றாக இருந்தால் மட்டும் போதாது. அதைஅடையும் வழியும் நன்றாக இருக்க வேண்டும் என்று நினைப்பவர் காந்திஜி.

ஒரு நல்ல குறிக்கோளை அடைய சிலரை வெட்டித் தான் அடைய வேண்டும் என்றால் அந்த வழியை காந்திஜி ஏற்றுக் கொள்வதில்லை.

காந்திஜியின் வழியில் ஜெயப்பிரகாசர். வாழ்நாள் முழுதும் பாடுபட்டார். மிகப் பெரிய ஜனநாயக நாடு இந்தியா.

இதைவிட அதிக ஜனத்தொகையைக் கொண்ட 80 கோடி மக்கள்தொகை உடைய சீனாவில் குடியாட்சி இல்லை. தடியாட்சி உண்டு.

இந்தியாவில் ஜனநாயகம் காப்பாற்ற, ஜனநாயக பண்பு வளர தம்முடைய வாழ்நாள் முழுதும் பாடுபட்ட பெருமை ஜெயப் பிரகாசருக்குண்டு.

### சோஷலிசம் வெற்றிபெற

ஜனநாயக முறை ஏட்டில் மட்டுமிருந்தால் போதாது.

ஜனநாயகம் ஆட்சியிலும் ஏற்படவேண்டும். பண்பு, பழக்கம் அணுகுமுறை எங்கும், எப்போதும் ஜனநாயக முறையில் இருக்க வேண்டும்.

சோஷலிசம் வெற்றி பெற சோஷலிசப் மனப்பான்மை மக்களிடையே வளரவேண்டும்,

ஜெயப்பிரகாசர் ஊட்டிய கருத்துகளுக்கு ஆக்கம் தர திட உள்ளத்துடன் அந்த வகையில் அவருக்கு அஞ்சலி செலுத்துவோம்.

யார் தூற்றினாலும் ஏற்றினாலும் அந்த கருத்துக்களுக்கு வலிவு தந்து கடைசி வரை ஜெயப்பிரகாசரை பின்பற்றி நடப்போம்.

இருள் இருக்கிறது என்றுகடிந்து கொள்வதைவிட மெழுகுவர்த்தியை ஏற்றி அந்த ஒளியில் நம்மால் முடிந்த வெளிச்சத்தை தரவேண்டும் என்றார் ஆங்கில அறிஞர் ஒருவர்.



### காந்தி வழியில்

அந்த வகையில் ஜெயப்பிரகாசர் பாடுபட்டார்.

கஷ்டநஷ்டம் எது வந்தாலும் எதையும்தாங்கும் இதயம்பெற்றதால்கடைசி வரை பாடுபட்டார்.

இந்திய ஜனநாயகத்தில் குழப்பம் ஏற்பட்டபோது சரிபடுத்தி வெற்றிபெற்றவர். ஜனநாயகத்தைப்பெற்றுத்தந்த ஒளியாகத்திகழ்ந்தவர் ஜெயப்பிரகாசர். அவரின் கருத்துக்களும் ஒளியும் அடங்கவில்லை.

இந்தியாவைச் சுற்றி உள்ளநாடுகள் சர்வாதிகார நாடாக ஆனாலும், நம்நாடு சர்வாதிகார நாடாக திகழாது பாதுகாக்க வேண்டும்.

காந்தி காட்டிய வழியில் மதிப்பளித்து பின்பற்றி பாடுபட்ட, அந்த உள்ளத்தைப்பெற்ற ஜெயப்பிரகாசர் வழி நடப்போம்.

கழகத்தின் சார்பில் அவரை பிரிந்து துயருறும் அனைவருக்கும் அனுதாபம் தெரிவித்து அஞ்சலி செலுத்துகிறோம்.

இவ்வாறு டாக்டர் நாவலர் பேசினார்.

---

**அடியார் முகவரி மாற்றம்**

அடியார்
எண் 3: எஸ். பி. சன்னதி
மூன்றாவது தெரு
ராயப்பேட்டை,
சென்னை 600014

---

# உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்கு விளையாட்டுப்போட்டி

## அமைச்சர் பி. டி. எஸ். தகவல்

சென்னை, அக் 10- தமிழ்நாட்டில் உள்ள 42 சமூக சேவை இல்லங்களைச் சேர்ந்த உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்கு விளையாடடுப்பந்தயப்போட்டி சென்னையில் நடத்தப்படும் என்று சமூகநலத்துறை அமைச்சர் பி. டி. எஸ் அறிவித்தார்.

சென்னை, அடையாற்றில் உள்ள ஆந்திர மகிள சபாவில் மகளிர் அரிமா சங்கத்தின் சார்பில் சாவதேச குழந்தைகள் ஆண்டு விழா கொண்டாடப்பட்டது.

நிகழ்ச்சிக்கு அரிமா சங்க தலைவர் சுப்பிரமணியன் தலைமை தாங்கினார். மகளிர் அரிமா சங்கத்தின் ...ட்டு தலைவி மேத்யூ வரவேற்பு உரை நிகழ்த்தினார் அமைச்சர் பி. டி. எஸ். நிகழ்ச்சியில் பங்கு கொண்டு குழந்தைகளுக்கான போட்டியில் பரிசு பெற்ற குழந்தைகளுக்கு பரிசு வழங்கி ...ப்புரை ஆற்றினார்.

அமைச்சர் பி. டி. எஸ். ...சியதாவது:

அரிமா சங்கங்கள், ...ண்கள் அரிமா சங்கங்கள், இளம் அரிமா சங்கங்கள் ஆகியவை தமிழகத்தில் ஏழைஎளியவர்களுக்கு ...ர் துடைக்கும் பணியில் ...பட்டிருப்பதை ...ந்த இரண்டு ஆண்டு ...க சமூக நலத் ...ற அமைச்சர் என்ற ...றையில் கண்டறிந்து ...க மகிழ்ச்சி அடைந்...க்கிறேன்

...ன்றைய தினம் இந்த ...பான நிகழ்ச்சிக்கு ஏற்...செய்த பெண்கள் ...மா சங்க நிர்வாகிக...நான் பாராட்டுதல் ...விக்க கடமைப் ...ருக்கிறேன்.

### ...கிழச் ...சய்தல்

...ன்னையில் பல்வேறு ...களில் குழந்தைகளுக் ...மருத்துவ சிகிச்சை ...ம்களை நடத்தி, நடத் ...தாடு நிறுத்திவிடா ...தொடர்ந்து அவர் ...த சுகாதார முறை ...சிகிச்சை அளித்து ...தைகளை காப்பாற்றி ...கிறீர்கள்.

...லும் குழந்தைகள் மகிழ்விற்காக உல்லாச பங்களுக்கு அவர்களை அழைத்து செல்லுகின்றீர் ...தந்திரக் காட்சிகளை ...அவர்களை மகிழ் ...விர்கள். ஏழ்மையின் அடித்தளத்திலே ...ட ஏழைகுழந்தைகளும், மனவளர்ச்சி அடையாத குழந்தைகளுக்கும் உடல் ஊனமுற்ற



குழந்தைகளுக்கும் பண உதவி செய்கிறீர்கள் என்பதை அறியும் போது மகிழ்ச்சி அடைகிறேன்.

தமிழக அரசை பொருத்த அளவில் இந்த ஆண்டு சர்வதேசகுழந்தைகள் ஆண்டு என்பதனை ஒட்டி பல்வேறு நல்ல திட்டங்களை செயலாற்றி வருகின்றோம்,

அண்மையில் யாரும் அற்ற ஆதரவில்லாத ஏழை குழந்தைகளுக்காக அனாதை இல்லங்கள் நான்கு அமைப்பதற்கு அரசு ஆணை வெளியிடப் பட்டிருக்கின்றது.

ஒவ்வொரு இல்லத்திலும் 250 குழந்தைகள் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். அவர்களை அக்கறையோடு கவனித்து நல்ல முறையில் வளர்த்து கல்வி போதிப்பதற்காக எல்லா ஏற்பாடுகளையும் சமூக நலத்துறை அதிகாரிகள் செய்து கொண்டிருக்கிறார்கள்.

இதுபோல் இன்னும் 6 இடங்களில் அனாதை இல்லங்கள் ஏற்படுத்தப்பட இருக்கின்றன.

### சீரிய பணி

அடுத்த மாதம் சென்னையில் 42 சமூகநல சேவை இல்லங்கள் சேர்ந்து உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்கான விளையாட்டு பந்தய போட்டி நடத்த இருக்கின்றோம். உடல் ஊனமுற்ற குழந்தைகளை உற்சாகப்படுத்த வேண்டும் என்று இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்படுகின்றன.

உங்களது சங்கத்தை பொருத்தஅளவில்உங்களது சீரிய பணிகளை மனமார பாராட்டுகின்றேன். உங்களது சீரியப்பணி தொடரட்டும் என வாழ்த்துகிறேன்,

இவ்வாறு அமைச்சர் பி.டி.எஸ். பேசினார். டாக்டர் அம்புஜம் நன்றி கூறினார்.

## தொட்டியம் செயல்வீரர் கூட்டம்

தொட்டியம் ஊராட்சி ஒன்றிய அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழக அமைப்பாளர்கள் செயல் வீரர்கள் கூட்டம் இந்த மாதம் 11ந் தேதி (வியாழன்) காலை 10 மணிக்கு தொட்டியம் வெங்கடேசா திரையரங்கில் நடக்கிறது என்று ஒன்றிய அமைப்பாளர் கே. பி. காத்தமுத்து எம். எல். ஏ. கூறியுள்ளார்.

பொன்னையன் முன்னிலையில்

## 100 பேர் கழகத்தில் இணைந்தனர்

கரூர், அக். 10 கரூர் ஊராட்சி ஒன்றியம் வேலாயுதம் பாளையத்தில் உள்ள கலைவாணர் திடலில் கழகப் பொதுக் கூட்டம் நடந்தது. அமைச்சர் பொன்னையன், கு. வடிவேல் எம். எல். ஏ, மற்றும் பலர் பேசினர்.

கரூர் ஒன்றிய தி. மு. க. பிரதிநிதி கே. தர்மலிங்கம் புகளூர் ஆர். எஸ். தி. மு. க. செயலாளர் எம். பழனிசாமி, என். நல்லசிவம் ஆகியோர் தலைமையில் 100 பேர் தி. மு. க. ஜனதாக் கட்சிகளிலிருந்து விலகி கழகத்தில் தங்களை இணைத்துக் கொண்டனர்.

## ஆரணியில் நடந்த அண்ணாவிழா

ஆரணி, அக். 10- ஆரணி சைதாப்பேட்டையில் தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழா நடந்தது. பி. சின்னராஜ் தலைமையில் நடந்த ஊர்வலத்தை தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் ஏ. கே. அரங்கநாதன் தொடங்கி வைத்தார்.

பெருமாள் தலைமையில் கூட்டம் நடந்தது. அமைச்சர் ராகவானந்தம், குடிநீர் வாரியத்தலைவர் ஏ. கே. அரங்கநாதன் எம். எல். ஏ., வி. அர்ச்சுனன் எம். எல். ஏ., குப்பன், சேலூர் சவுந்தரராசன், வையூர் நடராசன், தங்கராதா, பாஸ்கர், ஜெமினி ராமச்சந்திரன், ஆகியோர் பேசினர்.

## ரஷியா செல்லும் நல்லுசாமிக்கு வழியனுப்பு விழா

சென்னை, அக். 10- இந்திய விவசாய சங்க தூதுக்குழு உறுப்பினராக சோவியத் ரஷ்யாவுக்கு செல்லும் கழக வழக்கறிஞரும் சட்டதிட்டக் குழு உறுப்பினருமான நல்லுசாமிக்கு திருச்சி விமான நிலையத்தில் சிறப்பான முறையில் வழி அனுப்பு விழா நடைபெற்றது.

மாவட்ட செயலாளர் பா.பா, சுந்தரம், திருச்சி தேவதாஸ், சீரங்கம் வீராசாமி, மணப்பாறை நடராசன், பி. எச். இ. எல். தொழிலாளர்கள், எம். ஜி. ஆர். மன்ற பொருளாளர் மம்மு, வழக்கறிஞர்கள் ராஜ்குமார், ...ரியண்ணசாமி, குளித்தலை அஜீஸ், ராஜகோபால், லயன்ஸ் கிளப் வெங்கடாசலம், திருச்சி வழக்கறிஞர் சங்க செயலாளா ராஜகோபால், திருச்சி பொறியியல் கல்லூரி முதல்வர் மணிசுந்தரம், கழக விவசாய பிரிவு தோழர்கள் அண்ணாதாசன் இளமுருகு, காட்டூர் ஜெயபால், ஜனதா பிரமுகர்கள் வெங்கடேசுவர தீட்சிதர், ஓ பி. ராமசாமி ரெட்டியார் இ காங்கிரஸ் பிரமுகர் அபேதானந்தம் மற்றும் ஏராளமானவர்கள் மாலை அணிவித்து வழி அனுப்பினர்

நல்லுசாமி ஞாயிறு இரவு விமான மூலம் டெல்லி செல்கிறார்.

அங்கிருந்து 15ந் தேதி காலை மாஸ்கோ பயணம் ஆகிறார்.

# யார் எவர் பக்கம் சேர்ந்தாலும் ஏழைகள் புரட்சித்தலைவர் பக்கமே

## அமைச்சர் அரங்கநாயகம் முழக்கம்

கோவை, அக் 10- இந்திரா காங்கிரஸ் தி. மு. க கூட்டணி நம்மை ஒன்றும் செய்ய முடியா. அந்தக் கூட்டணியை முறியடிக்கும் சக்தி புரட்சித் தலைவருக்கு இருக்கிறது என்று அமைச்சர் அரங்கநாயக கூறினார்.

கோவைப் பொதுக் கூட்டத்தில் அமைச்சர் அரங்கநாயகம் பேசியதாவது:-

இங்கே லட்சக் கணக்கான மக்கள் கூடி இருக்கிறார்கள். அரசியலில் புதிய திருப்பம் ஏற்பட்டுள்ளது.

யார் யாரோ கூட்டு சேருகிறார்கள். இந்திரா காங்கிரஸ், திமுக கூட்டால் தமிழகத்தில் எந்த மாற்றமாவது ஏற்படுமா என்ற வினாக்குறி ஏற்பட்டுள்ளது.

இந்த மக்கள் வெள்ளத்தைப் பார்க்கும்போது இந்திரா காந்தி கருணாநிதி கூட்டணியை முறியடிக்கும் சக்தி அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக அணிக்கு இருக்கிறது என்பது தெரியவருகிறது,

கூட்டு எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு கழகம் வழிகாட்டியாக இருக்கிறது.

ஆனால் சிலர் தங்கள் நலனைக் காத்துக்கொள்ள தரங்கெட்ட கூட்டை ஏற்படுத்திக்கொண்டு இருக்கிறார்கள்.

புரட்சித்தலைவர் எடுக்கும் முடிவு தமிழகத்திற்கு நல்ல முடிவாக இருக்கும்.

நம் எதிரிகள் தமிழ் மக்களின் எதிரிகள். புரட்சித் தலைவரிடம் தமிழக மக்கள் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள்.

எந்த சுயநலமும் இல்லாமல் புரட்சித் தலைவர் செயல்படுகிறார். ஆனால் மற்றவர்கள் தங்கள் சுயநலத்துக்காக பல கூட்டுகளை உருவாக்குகிறார்கள்.

இந்திரா காங்கிரஸ் தி. மு. க கூட்டணி நம்மை எதுவும் செய்ய முடியாது.



ஏழை எளிய மக்கள் புரட்சித்தலைவர் பக்கம் இருக்கிறார்கள்

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

பீடித் தொழிலாளர்களுக்கு

## கழகத் தோழர்கள் உதவி

திருச்சி, அக். 10- கூலி உயர்வு மற்றும் பலகோரிக்கைகளுக்காக திருச்சி நகரத்தில் பீடித் தொழிலாளர்கள் கடந்த பத்து நாட்களாக வேலைநிறுத்தம் செய்தனர். தென்னூர் குஷ்பிஷா நகர் மூலைக் கொல்லைத்தெரு, பாலன் நகர் பகுதியில் உள்ள பீடித் தொழிலாளர் குடும்பங்களுக்கு புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர் இ. எம். தாஜுதீன் மற்றும் பல கழகத் தோழர்கள் உதவி செய்தனர். 250 க்கும் மேற்பட்ட குடும்பங்களுக்கு தலா ஒரு கிலோ அரிசி வழங்கப்பட்டது.

---

# ஜெ. பி.யின் சர்வோதய இயக்கக் கொள்கையை செயல்படுத்துவோம்

## புரட்சித்தலைவர் இரங்கல் உரை

சென்னை, அக் 10- லோகநாயக் ஜெயப்பிரகாஷ் நாராயணனின் சர்வோதயக் கொள்கை நெஞ்சில் பதிய வைத்து அதைச் செயல்படுத்துவதே அவருக்கு நாம செலுத்தும் அஞ்சலியாகும் என்று வானொலி உரையில் முதல்வர் புரட்சித்தலைவர் குறிப்பிட்டார்.



ஜெயப்பிரகாஷ் நாராயணன் மறைவுக்குஇரங்கல் தெரிவித்து வானொலியில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:-

சுதந்திரப் போராட்டக் காலத்திலும் சரி, அவர் அமெரிக்காவில் கல்வி பயின்றபோதும்சரிதிரும்பி இந்திய துணைக் கண்டத்திற்கு வந்து, தனக்கென ஒரு கொள்கையை வகுத்துக் கொண்ட போதும் சரி எல்லோராலும் மதித்துப் போற்றப் படுகின்ற வினோபாஜி அவர்களுடையசர்வோதய இயக்கத் தொண்டராக மாறிய போதும் சரி, அவரது மனசாட்சி எந்தக் கருத்தை அவருக்கு கட்டளையாகவிதித்ததோ- அதன்படி மீண்டும் அரசியலில் பங்கு கொண்டு வயதான காலத்திலும் காவலில் வைக்கப்பட்ட போதும், காலம்கனியட்டு எனக் காத்திருந்து இந்திய துணைக்கண்டத்தில் உள்ள மக்கள் மட்டுமல்லாது உலகெங்கும் உள்ள மக்கள் கூட எதிர்பாராத ஒரு மாபெரும் மாற்றத்தை இந்தியத் துணைக் கண்டத்தில் ஏற்படுத்துவதற்கு முழுமுதல் தலைவராக இருந்தவர் ஜெயப்பிரகாஷ்நாராயண் அவர்கள்.

அவர் இன்று மறைந்து விட்டார். சோஷலிசத் தத்துவத்தின் நம்பிக்கை நட்சத்திரமாக இருந்தார் பெரியவர் ஜெயப்பிரகாஷ் நாராயண்.

அவர் இறுதியாகக் காவலில் வைக்கப்படும் முன் எடுத்துக்கொண்ட செயல் முறைகளில் சொன்ன கருத்துக்களில் மாறுபட்ட கருத்துக் கொண்டவர்கள்கூட மிகப்பெரிய வேதனையையும் ஏமாற்றத்தையும் பெறுவர் அவர் மறைவுச் செய்தியைக் கேட்டு என்பதில் ஐயமே இல்லை.

இந்தியத் துணைக்கண்டம் முழுவதும் உள்ள மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட மீதமிருக்கும் ஒரு சில தலைவர்களில், மிகப்பெரிய தலைவராக இருந்த ஒருவரை இன்று நாம் இழந்திருக்கின்றோம்.

இந்த நாடு, இந்த இழப்பை எப்படித் தாங்கிக் கொள்ளப் போகிறது என்பதை எண்ணிப்பார்க்கவே அச்சமாக இருக்கிறது.

எதிர்காலத்தில், அவருடைய சொல் எல்லா மக்களிடத்திலேயும் சென்றடையும். அவர் கருத்து அனைத்துக் கட்சித் தலைவர்களுக்கும் சென்றது. அது மதிக்கப்பட்டது.

இப்படிப்பட்ட இந்தியத் துணைக் கண்டத்து மக்கள் பெரும்பாலோருக்கு அறிமுகமானவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்பதை எண்ணிப் பார்க்கும்போது, ஏமாற்றத்தின் விளிம்பிலே தவிக்கும் நாம், இருந்த ஒருவரையும் இழந்துவிட்டோமே என எண்ணும் போது, அந்த அதிர்ச்சியை வார்த்தைகளால் விளக்குவதற்கு, நமக்கு உண்மையிலேயே எந்த வார்த்தையும் கிடைக்கவில்லை என்பதை சொல்லத்தான் வேண்டியிருக்கிறது.

ஏனெனில் பதவி தேடி வந்தபோதும், அதை ஏற்றுக்கொள்ள மறுத்தவர் மறைந்த தியாகி பெரியவர் ஜெயப்பிரகாஷ் நாராயண் அவர்கள் ஆவார்கள்.

வேறு யாராக இருந்தாலும் அவரைப் போன்ற உயர்ந்த நிலைக்கு வந்து விட்டால், அதிலும் பதவி தன்னைத் தேடி வருகிறது என்ற நிலையில் இருப்பாரேயானால் எளிதில் அந்த வாய்ப்பை வேண்டாம் என்று தூக்கி எறியத்துணிவார்களா என்பது சந்தேகமே.

அவருக்கு வயது அதிகமான போதும் அவரை இளைஞர்கள் நம்பினார்கள். நம்முடைய முதிர்ந்த பெரியவர்களும் அவருடைய கருத்தை ஏற்கத் தயாராக இருந்தார்கள்.

ஆனால் இனிமேல்... இதற்குபதில்கிடைக்கவில்லை. காலம் இவ்வளவுஎளிதாக ஏமாற்றி விடுகிறது. ஏங்க வைத்து விடுகிறது; என்பதை எண்ணிப் பார்க்கும் போது காலத்தின் கட்டளையை எதிர்க்கக் கூடியவர்கள் இன்னும் பிறந்துவிடவில்லையேஎன்றஏக்கம் தான் நமக்கு மிச்சமாகிறது.

தீரமிக்க துணிவு மிக்க ஜெயப்பிரகாஷ்நாராயண் அவர்களுக்கு பதிலாக காலம்தான் அவரைப் போன்ற தலைவரை இந்தியத்துணைக்கண்டத்திற்கு உருவாக்கித்தரவேண்டும்.

அவர் புகழ் என்றும் நிலைத்துநிற்கும். அவருக்கு நமது அஞ்சலியை நெஞ்சார செலுத்துவது என்பது அவருடைய சர்வோதய இயக்கத் தொண்டிற்கு அடையாளமாக எடுத்துக்கொண்ட அந்த கொள்கையை நாம் நன்றாக ஒவ்வொருவரும் மனதிலே பதியவைப்பதும் அதை செயலாக்க முற்படுவதும்தான், அவருக்குநாம் செய்கின்ற மரியாதையும், தருகின்ற காணிக்கையும் ஆகும்.

வாழ்க அவரது தியாகம் வாழ்க அவரது புகழ், வாழ்க அவரது சமத்துவ சமுதாயக் கொள்கை. அண்ணா நாமம் வாழ்க.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் வானொலியில் பேசினார்.

# பெங்களூர் காளிமுத்து பங்கேற்ற நிகழ்ச்சிகள்

பெங்களூர். அக் 10- பெங்களூர், 55 வது வட்ட கழகக்கிளையின் சார்பில் சிவன் செட்டி வட்டத்தில் தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழாக்கள் நடந்தன.

கோ. தாமோதரன் தலைமையில் ஆர். எஸ். ராஜன், சடகோபன், புரட்சித்தம்பி, தனபால் அப்பாதுரை, மற்றும் பலர் பேசினர்.

பெங்களூர் 38-வது வட்ட கிளையின் சார்பில் அப்பு தலைமையில் தனபால், கிருஷ்ணராஜ் முன்னிலையில் அமைச்சர், காளிமுத்து கழகக் கொடியினை ஏற்றிவைத்தார்

பெங்களூர் 12வதுவட்ட கிளையின் சார்பில் ராமச்சந்திரபுரத்தில் 40 அடி உயர கம்பத்தில் வட்ட அமைப்பாளர் கந்தசாமி தலைமையில் அமைச்சர் காளிமுத்து கொடியேற்றி வைத்தார். பின்னர்நடைபெற்ற கூட்டத்தில்மாநில சீரமைப்புக்குழு உறுப்பினர் கோ. தாமோதரன் காமராஜப் பேட்டை தொகுதி அமைப்பாளர் கிருஷ்ணராஜ், எம். ஜி. ஆர். மன்ற தலைவர் எஸ். எம். சுப்பிரமணி ஆகியோர் பேசினார்கள்.

இந்திய தொலைபேசி தொழிலாளர்கள் சார்பில் அமைச்சருக்கு வரவேற்பளிக்கப்பட்டது. இந்நிகழ்ச்சியில் அமைச்சருக்குபொன்னாடைபோர்த்தப்பட்டது. அமைச்சருடன் மாநில துணை தலைவர் மு. பாண்டியன் மாநில சீரமைப்புக்குழு உறுப்பினர் கோ. தாமோதரன் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

'வினை விதைத்தவர்கள்'

# பட்டிமன்றம்: பரமகுரு பங்கேற்பு

சென்னை, அக், 10- தமிழக ஐ. ஜி. (அமல) பொன். பரமகுரு எழுதிய ''வினை விதைத்தவர்கள்'' என்ற புத்தகத்தின் திறனாய்வு பட்டி மன்றம், ஒய். எம். சி, ஏ. பட்டி மன்றத்தின் சார்பாக சென்னையில் நடைபெற்றது.

விழாவிற்கு அவ்வை நடராஜன் தலைமை வகித்தார். ஒய். எம். சி. ஏ. பட்டிமன்ற செயலாளர் பக்தவத்சலம் அனைவரையும் வரவேற்று பேசினார். டாக்டர் பாலசுப்பிரமணியம் கோவி. மணிசேகரன், வானொலி கணேசன் ஆகியோர் பரமகுரு எழுதிய புத்தகத்தைப் பற்றிப் பாராட்டி பேசினார்கள். உண்மை சம்பவங்களைக் கொண்டு அதை நாடக வடிவாக மாற்றி அமைத்ததற்கு அவருடைய திறமையை அனைவரும்பாராட்டிப்பேசினார்கள்.

நேருக்கு நேர் பட்டி மன்ற விழாவில் கலந்து கொண்டவர்களின் பல்வேறு கேள்விகளுக்கு பரமகுரு பதில்அளித்தார், அப்போது தவறு செய்பவர்கள் கண்டிப்பாக தண்டிக்கப்படுவார்கள் என்பதை விளக்கமாக கூறினார்.

மேலும் ஐ. ஜி கிருஷ்ணசாமி, டி. ஐ. ஜி. ஸ்ரீபால் மற்றும் பிரபல எழுத்தாளர்கள், பூம்புகார் பிரசுரம் அதிபர் பிரதாப்சிங் ஆகியோர் விழாவில் கலந்துகொண்டார்கள்.

# குறிஞ்சிப்பாடி கிளை அமைப்பாளர் கூட்டம்

குறிஞ்சிப்பாடி ஊராட்சி ஒன்றிய கழகக்கிளை அமைப்பாளர்கள் - செயல்வீரர்கள் கூட்டம் இந்த மாதம் 14ந்தேதி (ஞாயிறு) காலை 9 மணிக்கு நெய்வேலி மெயின் ரோடில் குப்புசாமி கட்டிடத்தில் நடக்கிறது.

கிளைக் கழகஅமைப்பாளர்கள் கூட்டத்தில் தவறாமல் கலந்து கொள்ள வேண்டுமென குறிஞ்சிப்பாடி ஊராட்சி ஒன்றிய அமைப்பாளர் டாக்டர் ஏ. பி, சீனிவாசன் கேட்டுகொண்டுள்ளார்.

# புரட்சித் தலைவரை வெல்ல எந்த அணி முயன்றாலும் முடியாது

## அமைச்சர் சுப்புலட்சுமி முழக்கம்

கோவை, அக் 10- ஆயிரம் கட்சிகள் ஆயிரம் தலைவர்கள் வந்தாலும் புரட்சித் தலைவர் அணியை வெல்ல முடியாது மக்கள் புரட்சித் தலைவர் பக்கம் தான் இருக்கிறார்கள் என்று அமைச்சர் சுப்புலட்சுமி கூறினார்.

கோவையில் நடந்த கழகப் பொதுக்கூட்டத்தில் அமைச்சர் சுப்புலட்சுமி பேசினார். அவர் பேசியதாவது:

ஏழையின் சிரிப்பில் இறைவனைக்காண முடியும் என்ற தத்துவத்தை அமரர் அண்ணா கூறினார்.

இந்த தத்துவம் இதுவரை ஏட்டளவிலேயே இருந்தது புரட்சித் தலைவர் ஆட்சி ஏற்பட்ட பிறகு அண்ணாவின் அந்த தத்துவம் நடைமுறைக்கு வந்துள்ளது. அந்தக் கொள்கை உயிரோட்டம் பெற்றுள்ளது.

கிராமப்புறவேலைவாய்ப்பு திட்டம் ஏழைமக்கள்வாழ்வில் மலர்ச்சி ஏற்படுத்தும்

புரட்சித்தலைவர் செயல்படுத்தும் இத்தகைய திட்டங்களால் நாட்டில் ஒளி வெள்ளமும், மக்கள் உள்ளத்தில் மகிழ்ச்சி வெள்ளமும் ஏற்பட்டு வருது.



அண்ணாவின் லட்சியத்தைப் புரட்சித் தலைவர் நிறைவேற்றுவதால் லட்சக்கணக்கான மக்கள் இங்கே வருகிறார்கள்.

எத்தனை அணிகள் ஒன்று சேர்ந்து வந்தாலும் நாங்கள் புரட்சித்தலைவர் பக்கமே என்று லட்சோப லட்ச மக்கள் வந்திருக்கிறார்கள்.

ஆயிரம் கட்சிகள் ஆயிரம் தலைவர்கள் வந்தாலும் புரட்சித்தலைவர் அணியை வெல்ல முடியாது காரணம் புரட்சித்தலைவர் அணி மக்களின் அங்கமாயிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் சுப்புலட்சுமி பேசினார்.

# அரும்பாக்கம் கூட்டத்தில் பண்ருட்டி பேசுகிறார்

சென்னை, அக். 10- இன்று (புதன்கிழமை) மாலை 7 மணிக்கு அரும்பாக்கம் பிள்ளையார் கோவில் தெருவில் பிரும்மாண்டமான கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது. வி. கே. சுகுமாரன் தலைமை வகிக்கிறார்.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், வழக்கறிஞர் ராமகிருஷ்ணபாபு, சி. வி அன்புத்தம்பி, வ. கோதண்டராமன், கு அல்போன்ஸ், மு. மோகன், ஏ. இ. வெங்கடேசன், பார்த்தசாரதி, கோ. அ ஜார்ஜ், நா. ஞானசேகரன் மற்றும் பலர் பேசுவர்.

# சிதம்பரத்தில் அண்ணா விழா: நிதியமைச்சர் நாஞ்சிலார் பங்கேற்பு

சிதம்பரம், அக். 10-சிதம்பரத்தில் பல்வேறு இடங்களில் நடந்த பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழாக்களில் நிதியமைச்சர் நாஞ்சிலார் கலந்துகொண்டு கழகக்கொடிகளை ஏற்றி வைத்துப் பேசினார்.

தென்னாற்காடுமாவட்ட கழகக் கிளையின் சார்பாக சிதம்பரத்தில் பேரறிஞர் அண்ணாபிறந்தநாள் விழா சிறப்பாககொண்டாடப்பட்டது. நீலகண்டபுரத்தில் ஐயாயிரம்பேருக்கு உணவு வழங்கப்பட்டது. நிதியமைச்சர் நாஞ்சிலார் உணவு வழங்கினார். சி எஸ். ராமதுரை விழாவிற்கு தலைமை வகித்தார்.

வைப்புச்சாவடியில் உள்ள பேரறிஞர் அண்ணா சிலைக்கு நிதியமைச்சர் நாஞ்சிலார் மாலை அணிவித்தார்.



## 20 இடங்களில் கழகக் கொடி ஏற்றி வைப்பு

சிதம்பரத்தில், இருபதுக்கும் மேற்பட்ட இடங்களில் கழகக் கொடியேற்று விழாக்கள் நடந்தன. நிதியமைச்சர் நாஞ்சிலார் கொடிகளை ஏற்றி வைத்தார்.

சிதம்பரம் கீழவீதியில் பொதுக்கூட்டம் நடந்தது மாவட்ட அமைப்பாளர் ரத்தினபாலகுருசாமி எம். எல். சி. தலைமைவகித்தார் நிதியமைச்சர் நாஞ்சிலார் வி. வி. சாமிநாதன் எம். பி. முருகேசன், தில்லை வில்லாளன், கே. பி. பன்னீர்செல்வம், முத்து கோவிந்தராசன், என். எஸ். என். குமார், கே. ஆர். கணபதி, உத்திராபதி நார்த்தங்குடி வேணு கோபால், இ. வெங்கடாசலம், கே. எஸ். ராதா கிருஷ்ணன், இராம. ஆதிமூலம் ஆகியோர்பேசினர்.

காந்தி வீதியில் பி. வாசு முன்னிலையிலும் சமலீஸ்வரன் தெருவில் சி. எஸ். ராமதுரை முன்னிலையிலும் வ. உ. சி தெருவில் பொன். கலியன் முன்னிலையிலும், தேரடிக் கடைத் தெருவில் முத்துகோவிந்தராசன் முன்னிலையிலும் காளியப்பன் கோவில் தெருவில் தங்க. ஜெயராமன் முன்னிலையிலும் மேலவீதியில் வேணு கோபால் முன்னிலையிலும் தெற்கு வீதியில் ஆ. சின்னசாமி அயவு, நடராசன் முன்னிலையிலும் ப. உ. பள்ளியில் கே. எஸ். ராதாகிருஷ்ணன்முன்னிலையிலும், தெற்கு வாணியத் தெருவில் பால. செங்குட்டுவன் முன்னிலையிலும் வைப்புச் சாவடியில் மதுரை வீரனின் முன்னிலையிலும், செங்கட்டான்தெருவில் செல்வராஜ் முன்னிலையிலும், சின்ன செட்டித் தெருவில் உத்திராபதி குமார் முன்னிலையிலும், வெள்ளையன் தெருவில் நக்கீரன் முன்னிலையிலும் குஞ்சரமூர்த்தி விநாயகர் தெருவில் பிரகாசம், தி. க. கிருஷ்ண மூர்த்தி முன்னிலையிலும், சின்னக் கடைத் தெருவில் சிவ. சிதம்பரம் ஜெயபால் முன்னிலையிலும் வடக்கு வீதிமுனையில் வி. டி. அரசு முன்னிலையிலும் கழகக் கொடியேற்று விழாக்கள் நடந்தன.

நிதியமைச்சர் நாஞ்சிலார் கழகக் கொடிகளை ஏற்றிவைத்துப் பேசினார்.

### பேச்சாளர் முகவரி

முருகராஜ்
N 2. சின்னஅக்ராகரம்
மோகனூர்-637015
சேலம் மாவட்டம்

# ஜெகஜீவன்ராமை சந்தித்து இந்திரா ரகசிய பேச்சு

பாட்னா, அக். 10- ஜனதாத் தலைவர் ஜெகஜீவன்ராம் தங்கி இருந்த அறைக்குச் சென்று இந்திரா காந்தி அவரை சந்தித்துப் பேசினார்.

''லோக்நாயக்'' ஜெயப்பிரகாஷ் நாராயணனுக்கு அஞ்சலி செலுத்த ஜெகஜீவன்ராம் பாட்னா சென்றிருந்தார். அங்கு பீகார் அரசு விருந்தினர் மாளிகையின் அடித்தளத்தில் உள்ள அறையில் ஜெகஜீவன் தங்கி இருந்தார்.

பாட்னா சென்றிருந்த இந்திரா காந்தியும் அவா மகன் சஞ்சய்காந்தியும் முதல் மாடியில் தங்கி இருந்தார்கள்.



ஜெகஜீவன் ராமைச் சந்திக்க இந்திராவும் சஞ்சய்காந்தியும் முதல் மாடியிலிருந்து இறங்கி கீழே வந்தனர்.

ஜெகஜீவன்ராமுடன் அவர்கள் 20 நிமிடநேரம் பேசிக் கொண்டிருந்தனர்.

பேச்சு வார்த்தையின் போதுபீகார்ஜனதாத்தலைவர் எஸ். என். சின்காவும் உடன் இருந்தார்.

ஜெகஜீவன்ராமுக்கு லேசாக காய்ச்சல் இருந்தது. எனவே உடல் நலம் விசாரிக்க இந்திரா சென்றதாக கூறப்பட்டாலும் இது அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த சந்திப்பு என்று அரசியல் நோக்கர்களிடையே கருத்து நிலவுகிறது.



பீகார் ஜனதாக் கட்சியுடன் இ. காங்கிரஸ் ரகசிய உடன்பாடு கொள்ள விரும்புகிறது. இது சம்பந்தமாக ஏற்கெனவே பேச்சு நடந்திருக்கிறது.

அதன் தொடர்ச்சியாகவே இந்தப் பேச்சு வார்த்தை நடந்தது என்று கூறப்படுகிறது.

பீகாரில் சில தொகுதிகளில் ஜனதாக் கட்சியும், இ. காங்கிரசும்கூட்டாகத் தேர்தலில் போட்டியிட உடன்பாடு ஏற்பட்டிருப்பதாக பீகார் மாநில இ. காங்கிரஸ் தலைவர் ஒருவர் தெரிவித்தார்.

# தாயகம் திரும்பிய மதுரை மேயர் முத்துக்கு சிறப்பான வரவேற்பு

மதுரை, அ 10- ஆசியாவில் நடந்த தென் கிழக்கு ஆசிய மேயர்கள் மாநாட்டில் பங்கேற்று மதுரை திரும்பிய மதுரை மேயர் முத்துவு சிறப்பான வரவேற்பளிக்கப் பட்டது.

ஆசிய சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு சென்னை பாண்டியன் விரைவு வண்டி மூலம் மதுரை மேயர் முத்து மதுரை வந்து சேர்ந்தார்.

ரயில் நிலையத்தில் அமைச்சர்கள் ஆர்முத்து ராகவானந்தம் ஆகியோர் மாலை அணிவித்து வரவேற்றனர்.

மதுரை துணை மேயர் சந்தானம், லட்சுமிநாராயணன், எம். எல். ஏ. வெ. பாலகுரு, எம். எல். ஏ. பரமசிவம், எம். எல். ஏ. பாலுச்சாமி, எம். எல். ஏ. நாடாளுமன்ற முன்னாள் கழக உறுப்பினர் அன்பழகன் பி. வடிவேல், பி. தங்கம, என். எஸ். வேலு, மாநகராட்சி மன்ற உறுப்பினர்கள் அறிவரசன் சந்தான கிருஷ்ணன், கருணைதாசன், இளவரசன் மதுரை ராய், வை. ராஜேந்திரன், நடராசன், பிரமளா காந்தி, தமிழ் மணி, சிவ. கிருஷ்ணன் சந்திரன், தமிழ்நாடு காமராஜ் காங்கிரசைச்சேர்ந்த எம். ஆர். மாணிக்கம், மற்றும் நாராயணன் மு. திருப்பதி வி. எஸ். மணியம் ஆகியோர் மதுரை மேயர் முத்துவை வரவேற்றனர்.

திரளான கழக, மன்றச் செயல்வீரர்கள், நகரப் பிரமுகர்கள் அதிகாரிகள் ஆகியோர் மதுரை மேயர் முத்துவை வரவேற்றனர்.

கரகம், காவடி ஆட்டம் ஆகியவற்றுடன் பல்லாயிரக்கணக்கான கழகத் தோழர்கள் வாழ்த்து முழக்கங்களுடன் மதுரை மேயர் முத்துவை வரவேற்றனர். ''தந்தை பெரியார் புகழ் வாழ்க'' ''பேரறிஞர் அண்ணாபுகழ் வாழ்க'' ''முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்க'' என்ற வாழ்த்து முழக்கங்கள் விண்ணைப் பிளந்தன.

ரெயிலடி அருகே அமைந்த மேடையில் நின்று மதுரை மேயர் முத்து தனக்கு அளிக்கப் பட்ட பாராட்டுக்கு நன்றி தெரிவித்துப் பேசினார்.



தமிழக அரசு தலைமைச் செயலகத்தில் தமிழக முதல்வர் புரட்சித்தலைவரை ஜப்பான் நாட்டுத் தூதர் கே. புருசாவா சந்தித்து பேசியபோது எடுத்த படம்.

